ஓம்

தத் ஸத்.

தேவார நகரம்

சுத்த அத்வைதி அருட்கவி

விலக்ஷணானந்த ஸ்வாமிகள்

அருளிச்செய்த

# பத்தாண்டி

ஸ்ரீ கி. அரு...

அவர்களின் நினை...

இஃது...

திருமதி சிவரமல...

(1982)

ந. லக்ஷ்மண ரெட்டியார் அவர்களால்.

---

திரிசிராப்பள்ளி

ஜெகம் அண்டு கோ., டாட்ஸன் பிரசில்

பதிப்பிக்கப்பட்டது

1918.

ஓம்

# முகவுரை.

அன்பர்காள்!

தேவாரநகரம் சுத்த அத்வைதி அருட்கவி ஸ்ரீ விலக்ஷணானந்த ஸ்வாமிகள் ஓர்நாள் அனேக சிவனடியார் திருக்கூட்டத்துடன் திருசிராப்பள்ளிக்கு மேற்கு முப்பதுமைல் தூரத்துள்ள தொட்டியம் என்னு நகரின்மார்க்கமாய்க் கொளக்குடி நகரத்துக்குச்செல்காலையில் தொட்டியத்தருகாண்மையிலுள்ள **அனலாடி** என்ற ஓர் சிவாலய தரிசனஞ்செய்து திரும்புகால் ஒருவன் ஒரு வண்டி வந்திருக்கிறது என்றான். ஸ்வாமிகள் "ஒருவண்டியேகனடி உற்றாருமில்லையடி" என்ற முதலடியை ஆரம்பித்துப் பத்துப் பாசுரங்களையும் திருவாய்மலர்ந் தருளினர். இப் பத்துப்பாக்களும் ஆண்டி என்றே வந்துளதாலும் யாவருக்கும் பரமசிவன் பற்றாண்டி என்பதாலும் இந் நூலுக்கும் **பத்தாண்டி** என நாமமிடப்பட்டது.

இங்ஙன் —

ஓர் அன்பன்.

ஓம்.
தத் ஸத்.

# பத்தாண்டி

ஒருவண்டியேகனடி யுற்றாருமில்லையடி
கருவண்டியில்லாண்டி காண்பவர்க்குங்காணுண்டி
யிருவண்டியில்லவண்டி யெப்போதுஞ்சின்மயண்டி
அருவண்டியானவண்டி யாகாதவம்பரண்டி. 1

சொல்லாலுங்காணுண்டி சொற்பெரியநாதனடி
வெல்லாமனிற்பவண்டி வேதமுதலானவண்டி
யெல்லார்க்குமொட்டாண்டி யேகாந்தமானவண்டி
நில்லாண்டியில்லாண்டி நிர்க்குணமாமவன்தாண்டி. 2

அவன்தாண்டியிவன்தாண்டி யப்புறமுந்தானுண்டி
சிவன்தாண்டியரிதாண்டித் திரிபுரத்தையெரித்தாண்டிப்
பவந்தாண்டியென்னைமாட்டிப் பக்குவமாயானவண்டி
நவந்தாண்டிகாணுண்டி நாரணனும்போனுண்டி. 3

எல்லார்க்குமுள்ளவண்டி யேகமுதலானவண்டி
சொல்லாமற்சொன்னவண்டி சோகாதியற்றவண்டி
கல்லாலிலானவண்டி காண்பதற்குமாட்டாண்டி
பொல்லாதயோகனடி போக்கிலியாமவன்தாண்டி. 4

ஆட்டுவண்டியகமுழுது மாகாமணிற்பாண்டி
மாட்டுவண்டிமாந்தரெலா மனமுதலாங்கரணமதை
வாட்டுவண்டிவழிதாண்டி வழிதெரியக்காட்டுவண்டி
ஏட்டுவண்டியில்லாண்டி யீசானநாயகண்டி. 5

அன்பினுருவானவண்டி யானிரையுமானவண்டி
தென்புலத்தின்மாந்தருக்குத் தேற்றமிகவானவண்டி
நன்பதியைநாடுவண்டி நல்லவர்க்குநல்லவண்டி
சொன்மாலைகற்றவண்டி சொக்கலிங்கமானவண்டி. 6

வாராண்டிவாராண்டி வந்தநிலைவந்தவண்டி
தாராண்டிதாராண்டி தற்பதத்தையென்றனுக்கு
வேறுண்டிவேறுண்டி வெட்டவெளிக்கப்பாலாய்க்
கூறுண்டிநிற்பாண்டி குக்குடத்தைக்கொன்றவண்டி 7

அஞ்சுவயுதானவண்டி யாமுழுதுங்கார்த்தவண்டி
கஞ்சனையுங்கொன்றவண்டி காண்டீபற்கானவண்டி
வஞ்சகமேகொண்டவண்டி வாலவயதானவண்டி
செஞ்சரணங்கொண்டவண்டி சேதனமுமவன்தாண்டி

வேதமயமானவண்டி வேகமனதாட்டுவண்டி
நாதமுடிவானவண்டி நாலுங்கடந்தவண்டி
கீதநிதியானவண்டி கின்னரமும்பாடுவண்டி
சாதனையுமற்றவண்டி சகசநிலையானவண்டி. 9

தொட்டியத்திஞனவண்டி தோன்றலெனக்கானவண்டி
எட்டியறியாதவண்டி யேடறுத்துநிற்பவண்டி
மட்டடங்காக்காளைவண்டி மாருதகுளக்குடியி
னிட்டமுடன்வந்தவண்டி யெல்லாமுமானவண்டி. 10

ஓம் தத் ஸத்.

ஓம்.

ஸ்ரீ ஸத்

தேவாரநகரம்

சுத்த அத்வைதி அருட்கவி

விலக்ஷணாநந்த ஸ்வாமிகள்

அருளிச்செய்த

# நால்வர் பாததூளி

அமரர் சி. அருணாசல முதலியார்
அவர்களின் நினைவாக அன்பளிப்பு.
இஃது
அளிப்பவர்:
திரு ஸ்ரீ [illegible] டிசலம்
கிராம முனிசீப் திருமலைரெட்டியார் அவர்களால்

---

திரிசிரபுரம் ஜெகம் அண்டு கோ., டாட்சன் பிரஸில்
பதிப்பிக்கப்பட்டது.

1918

ஓம்.

தத். ஸத்

# முகவுரை

---

அன்பர்கள்

தேவாரநகரம் சுத்த அத்வைதி அருட்கவி ஸ்ரீ விலக்ஷணானந்தஸ்வாமிகள் ஓர் நாள் முசிரி தாலுகாவைச்சார்ந்த குளக்குடிஎன்ற ஓர்நகருக்குச் சென்றிருந்தனர். அத்தருணம் அவ்வூர் கிருமமுனிசீப் எ நல்லப்பரெட்டியார் கிருஹத்திற் றங்கியிருந்தனர். அச்சமயம் நால்வர்பாததூளி என்ற ஓர் நூல் இயற்ற ஆரம்பித்து ஐந்து நிமிஷத்திற்குள் பதினாறு கவிகளையுந் தானே யெழுதியுளார்

இங்ஙன்

ஓர் அன்பன்.

ஓம்.

தத். ஸத்.

# நால்வர் பாததூளி

---

சம்பந்தர்மாணிக்கர் சுந்தரனுமப்பரவர்
தம்பந்தந்தான்விலக்கித் தற்பரமேயானார்க
ளெம்பந்தந்தீராதோ வீசனடிநால்வருக்கு
மும்பந்தமுஞ்சாதி யுட்டூளியாவேனே. (1)

ஆவேனுனல்வருக்கு மாருக்குமாட்டேனு
னேவேபிறப்பிறப்பாய் நொந்தவெனை நண்ணறிவைப்
பாவாற்பதிகாட்டிப் பக்குவமுங்காட்டிடுவா
யீவாயெனக்கின்று மென்னுல்வர்தூளியதே. (2)

முத்திநிலைபெறவேண்டி முதல்வரதிகாரரவர்
பத்தியுறுநால்வருறை பாடலதேபோதுமது
சத்தியமேசத்தியமே சங்கரனுக்காளாவர்
நித்தியமுநால்வரடி நேராதுநேருவமே. (3)

நேராம்வழியெதுவோ நேர்ந்தவழியேதென்று
பாராமனிதரெலாம் பக்குவமாய்வாருங்கள்
தீராதசங்கரனைத் தீர்ந்தறியநால்வருறை
பேராகுந்தேவாரம் பேர்பெற்றவேதமதே. (4)

அறியாமல்மானுடர்க ளகச்சமயம்புறச்சமயம்
பிறிவானவதுதெரியாப் பேதையராய்ப்போனார்க
ளெறியானநால்வருறை நிச்சயத்தைப் பாராத
குறியாளர்குடிகேடர் கோதற்றவேதமதே. (5)

அடியார்களடிபேணி யரகரனைத்தினம்போற்றிப்
படிமீதுபாடாமற் பாவியனாயானேனே
நொடிநேரமுனைமறந்து நூலுணர்ந்துநின்றேனே
கடிமணமாஞ்சம்பந்தா கானினதுதூளியனே. (6)

தேவாரந்தெரியாத தெளிவில்லாமானுடரை
யோவாமலேன்படைத்தா யுன்னைவுக்கெட்டாதோ
காவாயெனையகற்றிக் கற்பகமாநால்வர்களே
தேவேயென்றெள்ளமுதே தேர்ந்தவர்களுல்வர்களே.

நாலாகுந்தத்துவத்தை நான்கடப்பதென்றென்று
வாலாமரத்தடியி லரனன்றுகாட்டியதை
வேலாயவதரித்த விண்ணவர்களுல்வர்களே
காலானின்றாசியனே காட்டாயடியேற்கே. (8)

ஐயோவிப்பாரதர்க ளறிவிழுந்துமதைநாடி
மெய்யாகுந்தேவாரம் விளம்பியிடுநால்வருக்கு
மெய்யடியாராகாமல் மேல்விழுந்துமாயையிலே
பொய்யாகப்போனுர்கள் போகாமலாக்கிடுவாய். (9)

மாயாவாதக்குழியில் மாட்டிநிதமாளாமற்
ரேயாவருளெனக்குத் தோன்றிடவுஞ்செய்யாயோ
மாயோனின்மாயோனே மாறனக்குமாறவனே
நீயேயெனக்குறுதி நிற்கின்றநால்வர்களே. (10)

என்னேக்கிடைத்ததிது யார்செய்தமாதவமோ
பொன்னேபோற்றேவாரம் பூணுதகண்டகரை
யென்னேபடைத்தானென் னீசானநாயகனுர்
தன்னேருமில்லாத தாணுநால்வர்களே. (11)

நீங்களுரைதேவார நிண்ணயமேநிண்ணயமாய்ப்
பாங்கிலுறைசம்பந்தா பக்குவநின்பக்குவமாஞ்
சாங்கிய நூல்சொன்னாலுஞ் சற்றேனுந்தாளேனா
ஞேங்கியதோர்நால்வர்களை யும்பாததூளியனே. ()

அத்துவிதம்வேண்டுமென வாகாதகாலமெலாம்
பொய்த்துவிதத்தாலுளன்றேன் போதமிகுநால்வர்களே
சத்தியமேதென்றாய்ந்து சங்கரனேசத்தியமென்
றெத்தினத்துநானறிய விதுசெய்வீர்நால்வர்களே. ()

என்னென்னபேருதவி யென்றனக்குச்செய்தீர்க
ளன்னன்னவாகமத்தை யறியாதவென்றனக்குச்
சொன்னமுறைத்தேவாரஞ் சோதிநிலைகாணுதற்கு
மன்னிலையையடியேற்கு மறிவுவரச்செய்வீரே. (14)

இன்றெழுதும்பாசுரங்க ளியானெழுதவில்லையிது
மன்றுணடமாடுமவன் மனமதிலேதானினைத்துச்
சென்றடையுங்கதிகாணச் சேர்பவர்க்குநால்வர்களே
நன்றிதெனநாட்டியிட நன்றாகநாட்டினனே. (15)

## வாழி

வாழிநால்வர்கள் வந்தருள்பூமகள்
வாழிதேவர்கள் வந்திடுஞ்சங்கரன்
வாழிநாமகள் வகையடியார்களும்
வாழிவாழிய வாழியவாழியே. (16)

ஓம். தத். ஸத்.